නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**85 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2016**

| | |
|---|---|
| ගෘහ ආර්ථික විද්‍යාව **I, II**<br>மனைப் பொருளியல் **I, II**<br>Home Economics **I, II** | පැය තුනයි<br>மூன்று மணித்தியாலம்<br>Three hours |

## மனைப் பொருளியல் I

**கவனிக்க :**
- (i) **எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.**
- (ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
- (iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
- (iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** குளுக்கோசு மூலக்கூறுகள் இரண்டின் சேர்க்கையால் உருவாவது,
(1) மோல்ற்றோசாகும். (2) சுக்குரோசாகும். (3) இலக்ரோசாகும். (4) அமைலோசாகும்.

**2.** பழங்களில் அடங்கியுள்ள இரண்டு காபோவைதரேற்றுகளாவன,
(1) சுக்குரோசும் மோல்ற்றோசுமாகும். (2) பிறக்ரோசும் குளுக்கோசுமாகும்.
(3) குளுக்கோசும் மோல்ற்றோசுமாகும். (4) பிறக்ரோசும் கலக்ரோசுமாகும்.

**3.** நார்த்தன்மையான உணவுகளில் பிரதானமாக அடங்கியுள்ள காபோவைதரேற்று,
(1) செலுலோசாகும். (2) மாப்பொருளாகும். (3) பெக்ரினாகும். (4) டெக்ஸ்ரினாகும்.

**4.** தானியங்களில் அதிகளவில் அடங்கியுள்ள போசணைப் பாதார்த்தங்கள் இரண்டு,
(1) மாப்பொருளும் விற்றமின் $B_1$ உம் ஆகும். (2) இரும்பும் விற்றமின் E யும் ஆகும்.
(3) கல்சியமும் விற்றமின் A யும் ஆகும். (4) மாப்பொருளும் விற்றமின் K யும் ஆகும்.

**5.** கொழுப்பைக் கொண்டுள்ள பழம் எது?
(1) வில்வம்பழம் (2) தோடம்பழம்
(3) விளாம்பழம் (4) ஆனைக்கொய்யாப்பழம்

**6.** நிரம்பிய கொழுப்பமிலங்கள் இரண்டு,
(1) மிரிஸ்ரிக்கமிலமும் அரக்கிடொனிக்கமிலமும் (2) பியூற்றிக்கமிலமும் ஒலேயிக்கமிலமும்
(3) லினொலெயிக்கமிலமும் லினோலெனிக்கமிலமும் (4) பாமிற்றிக்கமிலமும் ஸ்ரியரிக்கமிலமும்

**7.** விற்றமின் $B_3$ யின் இரசாயனப் பெயர்,
(1) நிக்கொட்டினிக்கமிலம் (2) அசுக்கோபிக்கமிலம்
(3) பன்ரோதெனிக்கமிலம் (4) போலிக்கமிலம்

**8.** சிறுநீருடன் உடலிலிருந்து வெளியேறும் விற்றமின்
(1) விற்றமின் A (2) விற்றமின் C (3) விற்றமின் D (4) விற்றமின் E

**9.** குருதிச்சோகை ஏற்படக் காரணமாக அமையும் போசணைக் குறைபாடுகள் இரண்டு,
(1) இரும்பும் விற்றமின் K யுமாகும். (2) இரும்பும் கல்சியமுமாகும்.
(3) இரும்பும் போலிக்கமிலமுமாகும். (4) இரும்பும் அயடீனுமாகும்.

[பக். 2 ஐப் பார்க்க

10. பின்வருவன 'X' எனும் போசணைப் பதார்த்தத்தினால் ஆற்றப்படும் சில தொழிற்பாடுகள் ஆகும்.
- சக்தியை வழங்குதல்
- நிர்ப்பீடனத்தை ஏற்படுத்தல்
- ஓமோன் உருவாக்கத்திற்கு இன்றியமையாததாதல்
- குருதி உற்பத்திக்கு இன்றியமையாததாதல்

இங்கு 'X' எனப்படுவது,
(1) காபோவைதரேற்றாகும். (2) கொழுப்பாகும். (3) விற்றமின் A ஆகும். (4) புரதமாகும்.

11. அதிக போசணையைக் கொண்ட காலைவேளை உணவு பின்வருவனவற்றுள் எது?
(1) இடியப்பம், மீன்கறி, தேங்காய்ப்பூச் சுண்டல், வாழைப்பழம்
(2) பாண், பட்டர், ஜாம், பப்பாசிப்பழத் துண்டு
(3) பிட்டு, பாற்சொதி, உப்பு மிளகாய் (கட்ட சம்பல்), மாம்பழத் துண்டு
(4) அப்பம், சோயாமீற் கறி, சீனிச்சம்பல், கொய்யாப்பழம்

12. பின்வருவனவற்றுள் புரத மிகைநிரப்பு உணவு **அல்லாதது** எது?
(1) பயறு சேர்க்கப்பட்ட பாற்சோறு (2) தோசை
(3) பயற்றம் பணியாரம் (4) இலையப்பம் (ஹலப்ப)

13. உணவுத் தயாரிப்புச் செயன்முறையின்போது, கைக்கொள்ளப்பட வேண்டிய சரியான ஒழுங்குமுறை,
(1) சுத்தஞ் செய்தல், வெட்டுதல், கழுவுதல், சுவைச்சரக்குச் சேர்த்தல், சமைத்தல்
(2) வெட்டுதல், சுத்தஞ் செய்தல், கழுவுதல், சுவைச்சரக்குச் சேர்த்தல், சமைத்தல்
(3) கழுவுதல், சுத்தஞ் செய்தல், வெட்டுதல், சுவைச்சரக்குச் சேர்த்தல், சமைத்தல்
(4) சுத்தஞ் செய்தல், கழுவுதல், வெட்டுதல், சுவைச்சரக்குச் சேர்த்தல், சமைத்தல்

14. பின்வரும் எந்தச் சந்தர்ப்பத்தில் ஜெலற்றினாக்கம் நிகழும்?
(1) கேக்கை கனலடுப்பில் சுடுதல் (2) வற்றாளையை அவித்தல்
(3) பாண்துண்டை வாட்டுதல் (4) மீன் ஸ்ரு தயாரித்தல்

15. பின்வருவனவற்றுள் முன்சிறுகுடலில் நடைபெறும் சமிபாட்டுச் செயன்முறை,
(1) புரதம் ⟶ பெப்தோன்கள் (2) சுக்குரோசு ⟶ குளுக்கோசும் பிரக்ரோசும்
(3) இருபெப்தைட்டுகள் ⟶ அமினோவமிலம் (4) மாப்பொருள் ⟶ மோல்ற்ரோசு

16. பின்வருவனவற்றுள் காபோவைதரேற்றைச் சமிபாடடையச்செய்யும் நொதியங்கள் மாத்திரம் அடங்கிய தொகுதி யாது?
(1) உமிழ்நீரிலுள்ள அமிலேசு, இலிப்பேசு (2) மோல்ற்ரேசு, சுக்கிரேசு
(3) இலக்ரேசு, இலிப்பேசு (4) சுக்கிரேசு, பெப்ரிடேசு

17. பற்றீரிய வளர்ச்சிக்கு மிக உகந்த அடிப்படைப் பதார்த்தம்,
(1) எண்ணெய் (2) பால் (3) நீர் (4) பழச்சாறு

18. கட்டிளமைப் பருவத்தில் துரித உடல் வளர்ச்சி நிகழும். கட்டிளமைப் பருவ ஆண் பிள்ளையொருவரில் பொதுவாக வளர்ச்சி ஏற்றத்தைக் காண்பிக்கும் வயதெல்லை
(1) 10 - 12 வயது (2) 12 - 14 வயது (3) 14 - 16 வயது (4) 16 - 18 வயது

19. தெசுத்தோத்திரோன் ஓமோன் சுரக்கப்படுவது,
(1) கபச்சுரப்பி மூலமாகும். (2) அதிரீனல் சுரப்பி மூலமாகும்.
(3) விதைகள் மூலமாகும். (4) முன்னிற்கும் சுரப்பி மூலமாகும்.

20. முதிர்ந்த சூலொன்றில் கருக்கட்டல் நிகழ்வது,
(1) பலோப்பியன் குழாயில், சூலகத்துக்கு அண்மித்த பகுதியிலாகும்.
(2) பலோப்பியன் குழாயில், கருப்பைக்கு அண்மித்த பகுதியிலாகும்.
(3) பலோப்பியன் குழாயின் நடுப்பகுதியிலாகும்.
(4) கருப்பையிலாகும்.

21. பின்வருவன முற்பிரசவப் பருவ விருத்தி தொடர்பாக மாணவியொருவரால் எழுதப்பட்ட குறிப்பிலிருந்து பெறப்பட்ட வாக்கியங்கள் சிலவாகும். இவற்றுள் சரியானதைத் தெரிக.
(1) 0 - 3 மாத காலப் பருவம் முளையப் பருவமாகும்.
(2) உட்பதித்தலின் பின்னர் கருக்கட்டிய சூலில் கலப்பிரிவு நிகழும்.
(3) முற்பிரசவ காலம் 40 வாரங்களாகும்.
(4) முற்பிரசவ காலத்தின் முதல் மூன்றுமாத காலப் பகுதியில், தாயில் அதிக நிறை அதிகரிப்பு ஏற்படும்.

[பக். 3 ஐப் பார்க்க

22. கர்ப்பிணி நிலையின் போதான ஆபத்துக் காரணியாக அமைவது,
(1) வயிற்றுக் குமட்டல் (2) மலச்சிக்கல்
(3) நீரிழிவு (4) பாதங்கள் வீங்குதல்

23. தாய்மாருக்கான பிணியாய் நிலையத்துக்கு வரும் முதல் நாளன்று மட்டும் மேற்கொள்ளப்படும் பரிசோதனை / அளவீடு
(1) தாயின் நிறையை அளவிடல் (2) தாயின் உயரத்தை அளவிடல்
(3) குருதியமுக்கத்தை அளவிடல் (4) சிறுநீர்ப் பரிசோதனை

24. இலங்கையில் குறைந்த நிறைகொண்ட பிள்ளைப்பேறு எனக் கருதப்படுவது, பிள்ளையின் பிறப்பு நிறை
(1) 1.5 kg இலும் குறைவாக உள்ள போதாகும். (2) 2.0 kg இலும் குறைவாக உள்ள போதாகும்.
(3) 2.5 kg இலும் குறைவாக உள்ள போதாகும். (4) 3.0 kg இலும் குறைவாக உள்ள போதாகும்.

25. சிசு என அழைக்கப்படுவது,
(1) பிறப்பிலிருந்து முதல் இரண்டு நாட்களுக்கு உட்பட்ட குழந்தையாகும்.
(2) பிறப்பிலிருந்து முதல் இரண்டு வாரங்களுக்கு உட்பட்ட குழந்தையாகும்.
(3) பிறப்பிலிருந்து முதல் நான்கு வாரங்களுக்கு உட்பட்ட குழந்தையாகும்.
(4) பிறப்பிலிருந்து முதல் இரண்டு மாதங்களுக்கு உட்பட்ட குழந்தையாகும்.

26. குழந்தையொன்றை, ஆறுமாத வயதில் மேலதிக உணவுக்குப் பழக்கப்படுத்தும்போது, முதலில் அளிக்கப்பட வேண்டியது,
(1) பழச்சாறாகும். (2) அரிசிக் கஞ்சியாகும். (3) மரக்கறி சூப் ஆகும். (4) திரிபோஷா ஆகும்.

27. தேசிய நிர்ப்பீடன வேலைத்திட்டத்துக்கு அமைய, குழந்தைக்கு ஒன்பதுமாத வயது பூர்த்தியடையும்போது வழங்கப்பட வேண்டிய தடுப்பு மருந்து,
(1) போலியோ வாய்ச்சொட்டு மருந்து
(2) ஜப்பானிய மூளைக்காய்ச்சல் (JE) தடுப்பு மருந்து
(3) சின்னம்மைக்கான தடுப்பு மருந்து
(4) BCG தடுப்பு மருந்து

28. திறந்த தட்டைப் பொருத்தினைத் தைக்கும்போது,
(1) பொருத்தின் மேலுள்ள துணிக்கரைகள் இரண்டையும் ஒரே பக்கத்துக்கு மடித்து முடிப்பை மேற்கொள்ள வேண்டும்.
(2) பொருத்தின் மேலுள்ள துணிக்கரைகள் இரண்டையும் இரண்டு பக்கங்களுக்கும் மடித்து முடிப்பை மேற்கொள்ள வேண்டும்.
(3) பொருத்தின் மேலுள்ள இரண்டு துணிக்கரைகளில் ஒன்றை அரைப்பங்கு வெட்டி மற்றையதை அதன்மீது மடித்துத் தைக்க வேண்டும்.
(4) பொருத்து தெரியாதவாறு இரண்டு துணிக்கரைகளையும் மறுபுறம் மடித்துத் தைக்க வேண்டும்.

29. ஊசியில் நூலை சில தடவைகள் சுற்றி, அதனூடே ஊசியை இழுத்து தையலை உரிய இடத்துக்கு வழிப்படுத்துவதன் மூலம் தைக்கப்படுவது,
(1) பூலியன் தையல் (2) நீள்குறு தையல்
(3) பிரான்சிய முடிச்சுத் தையல் (4) சற்றின் தையல்

30. பின்வருவனவற்றுள் பருத்திநார் தொடர்பான சரியான கூற்று எது?
(1) எரிக்கும்போது தலைமுடி எரியும் மணத்தை ஒத்த மணம் ஏற்படும்.
(2) அதிக நீளங்கொண்ட இயற்கை நார் வகையாகும்.
(3) விரைவில் நீரை உறிஞ்சக்கூடியது.
(4) அழுத்தும்போது குறைவான வெப்பநிலை பயன்படுத்தப்பட வேண்டும்.

31. செயற்கை நார்களின் தொகுதியைச் சேர்ந்த பொலிஏமைட்டு நார்,
(1) ரெறிலின் (2) ஓர்லோன் (3) ரெயோன் (4) நைலோன்

32. துணையணிகளைத் தயாரிக்கத் தேவையான இரண்டு கருவிகளாவன,
(1) அளவு நாடாவும் அலங்கரிப்பு வளையமும் (2) தையற் பொறியும் கபிலக் கடதாசியும்
(3) சுவடுவரை சில்லும் நாணும் (4) தையற்காரன் சோக்கும் தெறியும்

33. ஆடை தயாரிப்பின்போது மாணவர்களினால் கைக்கொள்ளப்பட்ட சில படிமுறைகள் வருமாறு. இவற்றில் சரியான படிமுறை எது?
(1) மாதிரியுருவிலுள்ள அமைப்புக்கோடு, தையல்கோடு ஆகியனவற்றை ஒரே நிறத்தில் காட்டுதல்
(2) மாதிரியுருவின் பாவு திசையை புடைவையின் பாவுவிளிம்பின் வழியே வைத்தல்
(3) மாதிரியுருவின் சிறிய பகுதிகளை முதலில் புடைவையின்மீது பரப்பி, பின்னர் பெரிய பகுதிகளைப் பரப்புதல்
(4) புடைவையின் மீது மாதிரியுருவை விரித்து, சுவடுவரை சில்லினால் அடையாளமிட்டு பகுதிகளை வெட்டி வேறாக்குதல்

[பக். 4 ஐப் பார்க்க

**34.** சிறுவர்களுக்கான சட்டைக்குரிய உடற்பகுதியைத் தைக்கும் ஒழுங்குமுறையாக அமைவது,
(1) தோள், திறப்பு, வேல்மடிப்பு, பக்கப் பொருத்து, கழுத்து ஆகியவற்றைத் தைத்தல்
(2) வேல்மடிப்பு, தோள், திறப்பு, கழுத்து, பக்கப் பொருத்து ஆகியவற்றைத் தைத்தல்
(3) தோள், கழுத்து, திறப்பு, பக்கப் பொருத்து, வேல்மடிப்பு ஆகியவற்றைத் தைத்தல்
(4) வேல்மடிப்பு, திறப்பு, தோள், பக்கப் பொருத்து, கழுத்து ஆகியவற்றைத் தைத்தல்

**35.** பெண் பிள்ளைக்கான சட்டை தொடர்பாக மாணவரொருவரின் குறிப்பிலிருந்து பெறப்பட்ட சில வாக்கியங்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியானது
(1) அடுக்கு உட்சட்டை தைக்கப்பட்ட பின்னரே அலங்காரத் தையல் வேலை (எம்புரொயிடரி) மூலம் முற்பக்க உடற்பகுதி அலங்கரிக்கப்பட வேண்டும்.
(2) திறப்பினைப் பூரணப்படுத்துவதற்கு கொளுக்கியும் கண்ணும் மிகச் சிறந்ததாகும்.
(3) புகுத்திய முகப்புத் துண்டு மூலம் சிறந்த கழுத்து வடிவத்தைப் பெறமுடியும்.
(4) திறப்பைத் தைக்கும்போது அதன் இடதுபக்கம், வலதுபக்கத்துக்கு மேலாக இருக்கும் விதத்தில் தைக்க வேண்டும்.

**36.** வீடுகள் சிலவற்றில் அவதானிக்கப்பட்ட இயல்புகள் சில வருமாறு: இவற்றுள் **பொருத்தமற்ற** இயல்பு
(1) யன்னலுக்கு மேலே வளிசெல் பலகணி இருத்தல்
(2) படுக்கையறையுடன் இணைந்ததாக குளியலறை, மலசலகூடம் (கழிப்பகம்) ஆகியன இருத்தல்
(3) சமையலறையில் இரண்டு கதவுகள் காணப்படுதல்
(4) படுக்கையறை யன்னலுக்கு ஒளி ஊடுபுகவிடக்கூடிய கண்ணாடி இடப்பட்டிருத்தல்

**37.** கலை மூலத்துவமாக அமைவது
(1) சமனிலை (2) பொருத்தப்பாடு (3) இழையமைப்பு (4) வலியுறுத்தல்

**38.** பின்வருவனவற்றுள் குளிர்நிறங்களைக் கொண்ட தொகுதியாக அமைவது,
(1) பச்சையும் நீலமும் (2) மஞ்சளும் பச்சையும் (3) ஊதாவும் மஞ்சளும் (4) நீலமும் செம்மஞ்சளும்

**39.** அலங்காரக் கோட்பாடான சந்தம் வெளிக்காட்டப்படும் ஒரு சந்தர்ப்பமாக அமைவது,
(1) வீட்டிலுள்ள படிகட்டுவரிசை
(2) பாவுகையின் மத்தியில் பொருத்தப்பட்டுள்ள மின்விளக்கு
(3) உணவு மேசையின் மத்தியிலுள்ள மலரொழுங்கு
(4) வரவேற்பு அறையிலுள்ள பல்வேறு துணையணிகள்

**40.** கூட்டுக் குடும்பத்தில் வாழ்வதனால் கிடைக்கும் அனுகூலம்,
(1) தீர்மானமெடுத்தல் இலகுவாகும். (2) பிரத்தியேகத்தன்மை பேணப்படும்.
(3) தொழிற்பங்கீடு சிறப்பாக இடம்பெறும். (4) நிதி முகாமை இலகுவாகும்.

* *

[பக். 5 ஐப் பார்க்க

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**85 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்**
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2016**

ගෘහ ආර්ථික විද්‍යාව **I, II**
**மனைப் பொருளியல் I, II**
Home Economics **I, II**

## மனைப் பொருளியல் II

* **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் நிகழ்வை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடைகளை எழுதுக.

இது தாய், தந்தை, கட்டிளமைப் பருவத்து மகள், மகன் ஆகியோரைக் கொண்ட குடும்பமாகும். இவர்கள் சிறப்பான குடும்ப வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். தந்தை, தொழிலில் ஈடுபட்டிருப்பதுடன் தாய், வீட்டு வேலைகளைக் கவனித்து வருகிறார். இந்தக் குடும்பத்தினரிடம் சிக்கனத் தன்மையை அவதானிக்கக் கூடியதாக உள்ளது. அவர்கள் தமது உணவுநுகர்ச்சிக் கோலம் தொடர்பாக விசேட கவனம் செலுத்தி வருகின்றனர். பிள்ளைகளதும் கணவரதும் தேவைகளை தானே மேற்கொள்வதில் தாய் அக்கறை கொண்டவளாய் உள்ளார்.

(i) தமது குடும்பத்தினருக்கான உணவைத் தயாரிக்கும்போது, தாயினால் கவனத்திற்கொள்ளப்பட வேண்டிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) கட்டிளமைப் பருவத்திலுள்ள ஆண்பிள்ளையின் விசேட போசணைத்தேவைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iii) வேலைக்குச் செல்லும் கணவர் எடுத்துச் செல்லுவதற்கென மதிய உணவு தயாரிக்கும்போது கவனத்திற்கொள்ள வேண்டிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iv) இந்தப் பிள்ளைகளினால் கடைப்பிடிக்கப்பட வேண்டிய சிறந்த உணவுப் பழக்கங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(v) இக் குடும்பச் சூழல் சிறப்பாக அமைய ஏதுவாக அமையத்தக்க விடயங்கள் யாவை?

(vi) அவர்களின் வீட்டிலுள்ள, படுக்கையறை யன்னலுக்கான திரைச்சீலைக்கென புடைவையைத் தெரிவுசெய்யும்போது கவனத்திற் கொள்ள வேண்டிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(vii) அவர்களது வரவேற்பறையில் வைக்கப்பட்டுள்ள வட்டவடிவ தழுவணையின் உறைக்குப் பொருத்தமான அலங்காரமொன்றை வரைக.

(viii) மூலைக்கோட்டு சரிவுப்பட்டியைப் பயன்படுத்தி இந்த தளுவணையின் விளிம்பை முடிப்புச் செய்யத்தக்க முறைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ix) கட்டிளமைப் பருவப் பிள்ளைகளின் உடல் வளர்ச்சியின்போது வெளிக்காட்டப்படும் சிறப்பியல்புகள் **இரண்டை** எழுதுக.

(x) கட்டிளமைப்பருவ மகளுக்குப் பாதுகாப்பை வழங்குவதற்காக தாயினால் மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

**2.** முன்பிள்ளைப்பருவக் குழந்தைக்கென நிருமாணிக்கப்பட்ட சட்டையொன்று உருவில் காட்டப்பட்டுள்ளது.



(i) இந்தக் குழந்தைச் சட்டையினை அலங்கரிப்பதற்குப் பயன்படுத்தக் கூடிய முறைகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) இதிலுள்ள பாவாடைப் பகுதியை முண்டப்பகுதியுடன் இணைப்பதற்காகத் தயார்செய்யும்போது கைக்கொள்ளப்படும் படிமுறைகளை எழுதுக.

(iii) இவ் உருவிலுள்ள குழந்தைச் சட்டையில், மேற்பகுதிக்கு மட்டும் சுருக்குகள் இடப்பட்ட பொம்மற்கை பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த கைப்பாங்கிற்கான மாதிரியுருவைத் தயாரிக்கும்போது கைக்கொள்ளப்படும் படிமுறைகளை வரிப்படங்களின் உதவியுடன் எடுத்துக்காட்டுக.

[பக். 6 ஐப் பார்க்க

**3.** (i) குளிரூட்டியில் உணவைக் களஞ்சியப்படுத்தும்போது கைக்கொள்ளப்பட வேண்டிய விடயங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) உணவும் போசணையும் தொடர்பான செயன்முறைச் செயற்பாடுகள் சிலவற்றின்போது மாணவர்களினால் முகங்கொடுக்க வேண்டி ஏற்பட்ட மூன்று பிரச்சினைகள் கீழே தரப்பட்டுள்ளன. இந்த ஒவ்வொரு பிரச்சினையும் ஏற்படக் காரணமான விடயங்களைக் குறிப்பிடுக.

(a) கட்லற்றைப் பொரிக்கும்போது உடைதல்

(b) பழச்சலாதிலுள்ள வாழைப்பழத் துண்டுகள் கபிலநிறமடைதல்

(c) பால் டொபி கட்டியாகாமை

(iii) பிள்ளையொருவர் பாடசாலைக்குக் கொண்டு செல்வதற்கென பதப்படுத்தப்பட்ட மீன் இடப்பட்ட பாண் படையடுக்கும் (சான்ட்விச்) மாம்பழப் பானமும் தயாரிக்கப்பட்டு வழங்கப்பட்டது.

(a) ரின் மீன் (பதப்படுத்தப்பட்ட மீன்) இடப்பட்டு தயாரிக்கப்பட்ட பாண் படையடுக்கு தொடர்பாக, பின்வரும் அட்டவணையில் உரிய விடயங்களை எழுதுக.

| உணவில் அடங்கியுள்ள உணவுப் பதார்த்தங்கள் | மாபோசணைப் பதார்த்தங்கள் | சேர்மானத்தில் அடங்கியுள்ள மூலகங்கள் | சமிபாட்டு இறுதி விளைவு |
|---|---|---|---|
| ● பாண் | | | குளுக்கோசு |
| ● ரின் மீன் | | C, H, O, N | |
| ● பட்டர் | கொழுப்பு | | |

(b) மேற்குறித்த உணவுவேளையில் மாம்பழப் பானத்தை சேர்த்தமையின் முக்கியத்துவத்தை எழுதுக.

**4.** (i) விலங்குக் கொழுப்பு, தாவரக் கொழுப்பு ஆகியவற்றுக்கு இடையிலான வேறுபாடுகளைக் குறிப்பிடுக.

(ii) கொழுப்புகளினால் உடலில் ஆற்றப்படும் தொழிற்பாடுகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(iii) வினாகிரியைப் பயன்படுத்தி நற்காப்புச் செய்யப்படும் உணவு வகைகள் **இரண்டைப்** பெயரிடுக. அவற்றுள் ஒன்றைத் தயாரிக்கும்போது கைக்கொள்ளப்படும் படிமுறைகளைப் பாய்ச்சற்கோட்டுப் படத்தின் மூலம் காட்டுக.

**5.** (i) மனை வள முகாமைத்துவத்தின் மூலமாகக் கிடைக்கும் அனுகூலங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) மனையின் வரவுசெலவுத் திட்டத்தில் வருமான வழிகள், செலவினத் தலைப்புகள், சேமிப்புகள் ஆகியன உள்ளடக்கப்படும். இவை ஒவ்வொன்றுக்கும் **இவ்விரண்டு** உதாரணங்கள் வீதம் குறிப்பிடுக.

(iii) நீலம், நீலப்பச்சை, பச்சை போன்ற அயல் வர்ணங்களைப் பயன்படுத்தி அறையொன்றை அலங்கரிக்கும் விதத்தை விளக்குக.

**6.** (i) கர்ப்பிணித் தன்மையின் இயல்புகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) 6 - 12 மாத வயதுப் பருவப் பிள்ளைகள் காட்டும் இயக்கத் திறன்கள் **மூன்று** எழுதுக.

(iii) பின்வருவனவற்றுக்குக் குறிப்பு எழுதுக.

(a) சூல் கொள்ளல்

(b) கருப்பையவணி (என்டோமெற்றியம்)

**7.** (i) பாலியல் மூலம் கடத்தப்படும் தொற்றுகள் **மூன்றைப்** பெயரிடுக.

(ii) கட்டிளமைப்பருவப் பிள்ளைகளின் உள விருத்தியின்போது வெளிக்காட்டப்படும் **மூன்று** இயல்புகளை எழுதுக.

(iii) "கட்டிளமைப்பருவப் பிள்ளையின் விருத்தியில் சமவயதுக்குழு முக்கியமானதாகும்." இதனை நியாயப்படுத்துவதற்கான **நான்கு** விடயங்களைச் சமர்ப்பிக்குக.

* * *